கட்டுரை



ஜி.ஏ. கௌதம்
திரைப்பட எடிட்டர்

# யாருக்கும் சிக்காத மீன்

கோடை காலத்தில் கரையில் அமர்ந்தபடியே அமைதியாக கடலை பார்த்துக்கொண்டு, அலையோசை கேட்டபடி விடுமுறைக்கு வரும் மக்கள் கடலைப் பார்க்கும் விதத்தையே முற்றிலுமாக மாற்றக்கூடிய அளவுக்கு சுறா மீன்களின் மீதான நிரந்தர பயத்தை ஏற்படுத்தும் ஒரு நிகழ்வை, 1975 ஆம் ஆண்டில் இயக்குனர் ஸ்டீவன் ஸ்பீல்பெர்க் பார்வையாளர்களிடையே கட்டவிழ்த்தார். அதே காலகட்டத்தில் வெளியான எழுத்தாளர் பீட்டர் பெஞ்ச்லியின் அதிகம் விற்பனையான புகழ்பெற்ற "ஜாஸ்" நாவலை அடிப்படையாகக் கொண்டு எடுக்கப்பட்டு அதே ‘ஜாஸ்’ என்ற பெயரில் வெளியான திரைப்படம் உலகையே அதிர வைத்தது. அதன் அற்புதமான மற்றும் எளிமையான கதை சொல்லும் முறையும், நகம் கடிக்கும் சஸ்பென்ஸ் காட்சிகளும் மற்றும் மறக்க முடியாத கதாபாத்திரங்களுடன், ‘ஜாஸ்’ வெளியான பல தசாப்தங்களுக்குப் பிறகும் பார்வையாளர்களை தொடர்ந்து கவர்ந்திழுக்கும் ஒரு நீடித்த தலைசிறந்த படைப்பாக இன்னமும் உள்ளது என்பது தான் நிதர்சனமான உண்மை. கடலுக்கு நடுவில் தெரியும் சுறா மீனின் திமிலை இப்போது தொலைக்காட்சியில் பார்த்தாலும் நமக்கு பயம் தொற்றிக்கொள்ளத்தான் செய்கிறது.

"ஜாஸ்" திரைப்படத்தின் கதை ‘அமிட்டி தீவு’ எனும் ஒரு புனைவான தீவில் நிகழ்கிறது. இந்தத்தீவில் வாழ்ந்துவரும் அமைதியான கடலோர சமூகம் அங்கு சுற்றுலா வரும் பயணிகளிடம் தங்கள் வாழ்வாதாரத்தை நம்பியுள்ளார்கள். இப்படிப்பட்ட சூழலில் அந்தக்கடலில் ஒரு பெரிய வெள்ளை நிற சுறா, அதிகம் யாரும் தேடப்படாத அளவுக்கு தனியாக கடலுக்குச் செல்லும் மக்களை குறிவைத்து தாக்குவதன் மூலம் அந்த அழகிய கடற்கரை ஒரு வேட்டைக்களமாக மாறுகிறது. அச்சமும் பீதியும் அந்தத் தீவை ஆட்கொண்டிருக்கும் நிலையில், நகரத்தின் காவல்துறைத் தலைவர் மார்ட்டின் பிராடி (ராய் ஷீடர்), தொடர்ந்து கொண்டிருக்கும் இந்த சுறாவின் வேட்டையைத் தடுக்க கடல் உயிரியலாளர் மாட் ஹூப்பர் (ரிச்சர்ட் ட்ரேபஸ்) மற்றும் மிகுந்த அனுபவம் வாய்ந்த சுறா வேட்டைக்காரர் குயின்ட் (ராபர்ட் ஷா) ஆகியோருடன் கரம் சேர்த்து அந்த சுறாவை கொல்கிறார்கள். அத்தனை ஆபத்தான சுறாவை எப்படி கொல்கிறார்கள்? எப்படி அது சாத்தியம் என்பதை விறுவிறுப்பான திரைக்கதை வழியே திரையில் விவரிக்கிறார் ஸ்பீல்பெர்க்.

"ஜாஸ்" படத்தின் வெற்றிக்கு அத்திரைப்படத்தின் தயாரிப்புக் கலையில் புரட்சியை ஏற்படுத்திய பல காரணிகளைக் கூறலாம். முதலாவதாக ஸ்பீல்பெர்க்கின் திறமையான இயக்கம், அடுத்து மிகத்திறமையாக வடிவமைக்கப்பட்ட காட்சிகள், புதுமையான கேமரா கோணங்கள் மற்றும் ஜான் வில்லியம்ஸ் இசையமைத்த மனதை மயக்கும் இசை. மேலும் அவற்றை மிகச்சரியாகப் பயன்படுத்தி இடைவிடாத பதட்டத்தையும், சஸ்பென்ஸுக்கான சூழலையும் உருவாக்கிய விதம். குறிப்பாக படத்திற்கே உரித்தான தீம்






இசை, வரவிருக்கும் ஆபத்துக்கு ஒரு குறியீடாக மாறியது.

மேலும், இத்திரைப்படம் நிகழ்த்திய தொழில்நுட்ப சாதனைகள் அக்காலகட்டத்தில் மகத்தானவை. புரூஸ் என்று அன்புடன் பெயரிடப்பட்ட இந்த இயந்திர சுறா, தயாரிப்பின் போது பல சவால்களை முன்வைத்தது. அதன் சிக்கலான ஹைட்ராலிக் அமைப்பு காரணமாக இது அடிக்கடி தொழில்நுட்ப சிக்கல்களை சந்தித்தது. இந்த சூழல் இயக்குனரை அதற்குத்தகுந்தவாறு ஏற்ற கேமரா கோணங்கள் மற்றும் சுறாவை நேரடியாகக் காட்டுவதை விட குறைந்தபட்ச காட்சிகளைப் பயன்படுத்துவதன் மூலம் த்ரில்லரை அதிகரிக்க வழிவகுத்தது. சுறாமீனுடைய இருப்பின் பெரும்பகுதியை பார்வையாளர்களின் கற்பனைக்கு விட்டுவிடுவதன் மூலம், ஸ்பீல்பெர்க் தற்செயலாக இன்னும் பயங்கரமான வில்லனாக அந்த சுறாவை உருவாக்கினார். கண்ணுக்குத் தெரியாத சுறாவின் நடமாட்டம் ஒரு அச்ச உணர்வை பார்வையாளர்களுக்கு ஏற்படுத்தியது. இதன் வழியே திகில் திரைப்படங்களில் ஒரு கதாப்பாத்திரத்தைமுழுதாகக்காட்சிப்படுத்தாமல் குறிப்பால் காட்சிப்படுத்துவதன் மூலம் அதிக அளவு பதட்டத்தை உருவாக்க முடியும் என நிரூபித்தார். ஜுராசிக் பார்க் படத்தில் டைனோசர் வரும் போது டம்ளரில் இருக்கும் தண்ணீர் அதிரும். அப்போது அந்த டைனோசர் உருவில் எத்தனை பெரியதாக இருக்குமோ என்று நமக்குள் ஒரு வித பயம் தொற்றிக்கொள்ளும். அந்த வகையான கதை சொல்லல் முறைக்கு அடித்தளமிட்டது ஜாஸ். நிலவொளியில் கடலில் ஒரு இளம் பெண் நீந்திச்செல்ல, திடீரென நீருக்கு அடியில் இழுத்துச் செல்லப்படும் தொடக்கக் காட்சி திரைப்பட வரலாற்றில் மிகவும் அதிர்ச்சியூட்டும் தருணங்களில் ஒன்று.

'ஜாஸ்' திரைப்படத்தின் பெரும்பகுதியை நீரில் படமாக்குவது நிறைய சவால்களை அளித்தது. கடலின் கணிக்க முடியாத தன்மை மற்றும் படகுகளின் தொடர்ச்சியான இயக்கம் மூலம் ஒரு காட்சியையும் இன்னொரு காட்சியையும் படம்பிடிக்கும் பணிக்கிடையில் தொடந்து படம்பிடிப்பது என்பது கடினமான ஒன்று. புயல்கள் மற்றும் கடல் கொந்தளிப்புகள் பெரும்பாலும்படப்பிடிப்பின்அட்டவணைகளை பாதித்ததால் நிலைமைகள் படப்பிடிப்பை மேலும் சிக்கலாக்கியது.

படம் துவங்கும் போது அதன் பட்ஜெட் நான்கு மில்லியன் டாலராக நிர்ணயிக்கப்பட்டது. மே 1, 1974 முதல் ஜூன் 28, 1974 வரை இரண்டு மாதங்களில் படப்பிடிப்பை முடிக்க திட்டமிட்டனர். ஆனால் தொழில்நுட்ப சிக்கல்கள் மற்றும் தாமதங்கள் காரணமாக, ஏழு மாதங்கள் வரை படப்பிடிப்பு நிகழ்ந்தது. மேலும் கடலில் மட்டும் நான்கு மாதங்கள் படப்பிடிப்பு நிகழ்ந்தது. தயாரிப்புப் பணிகள் தாமதமாகியது. இதனால் செலவுகள் அதிகரிக்க ஆரம்பித்தது. ஆனால் இது போன்ற இயற்கை வானிலை சூழல் இன்னொரு வகையில் திரைப்படத்திற்கு யதார்த்த உணர்வையும் தீவிரத்தையும் சேர்த்தன. இப்படியாக உற்பத்தி செலவுகள் அதிகரித்து இறுதியாக சுமார் ஒன்பது மில்லியன் டாலரை எட்டியது. இது அக்காலகட்டத்தில் மிக அதிக பொருட்செலவில் எடுக்கப்பட்ட படமாக மாறியது. இத்திரைப்படத்திற்கான பொருட்செலவுகளை இன்னொரு முறை நாங்கள் பார்த்திருந்தால் இந்தப்படத்தை எடுத்திருக்கவே மாட்டோம் என அதன் தயாரிப்பாளர்கள் சொல்லியிருக்கிறார்கள். அவர்களின்

கவனக்குறைவே 'ஜாஸ்' திரைப்படம் எடுக்க வழிவகுத்திருக்கிறது. ஒருவகையில் அதற்கு அவர்களிடம் நன்றி சொல்ல வேண்டும். ஒரு படைப்பு எப்படியெல்லாம் அதற்கான சூழலை அமைத்துக்கொள்கிறது பாருங்களேன்.

"ஜாஸ்" பார்வையாளர்களைப் பயமுறுத்தியது மட்டுமல்லாமல், ஹாலிவுட்டின் சஸ்பென்ஸ் உலகை வேறு பரிமாணத்தில் மாற்றியமைத்தது. நிஜவாழ்வின் பிரச்சனைகளிலிருந்து வெளியேற திரைக்கு வரும் பார்வையாளர்களும் மற்றும் பொழுதுபோக்குக்காக நல்ல திரைப்படங்களை தேடிப்பார்க்கும் பார்வையாளர்களுமாக சுறா வேட்டையின் விறுவிறுப்பை அனுபவிக்க, திரையரங்குகளில் காத்திருக்க வாரக்கணக்கில் நிறைந்த காட்சிகளால் இத்திரைப்படம் ஹாலிவுட்டின் கோடைகாலத்தின் முதல் உண்மையான பிரம்மாண்ட வெற்றிப்படமாக மாறியது. ஜாஸ் திரைப்படத்திற்கு முன்பு வரை "கோடைக்கால வணிகரீதியான பிரம்மாண்டமான வெற்றி" என்ற ஒரு வணிக முறையே அங்கில்லை. அதை உண்மையில் துவங்கி வைத்தது இத்திரைப்படம். வசூலில் தன் மகத்தானவெற்றியுடன்,"ஜாஸ்"பிரம்மாண்டமான திரைப்படத் தயாரிப்பின் ஒரு புதிய சகாப்தத்தை அறிமுகப்படுத்தியது. உலகளவில் 470 மில்லியன் டாலருக்கும் அதிகமாக வசூலித்தது. அதுமட்டுமின்றி அந்த நேரத்தில் அதிக வசூல் செய்த படமாக மாறியது. மேலும் ஸ்பீல்பெர்க்கை திரைத்துறையின் மிகுந்த செல்வாக்கு மிக்க இயக்குனர்களில் ஒருவராக நிறுவியது. நீருக்கடியில் உள்ள காட்சிகளைப் படம் பிடிக்கவும், படத்திற்கு நம்பகத்தன்மையைக் கொண்டுவரவும், ஸ்பீல்பெர்க் மற்றும் அவரது குழுவினர் உண்மையான சுறாக்களுடன் பணிபுரிந்தனர். உயிருள்ள சுறாக்கள் ஆபத்தில் மேலும் ஒரு அம்சத்தைச் சேர்த்தது. சில காட்சிகளில் யதார்த்த உணர்வை அதிகரித்தது. ஆனால் அதற்கு அவர்கள் எடுத்த ரிஸ்க் மிக அதிகம்.

எப்படி "ஜுராஸிக் பார்க்" திரைப்படம் டைனோசர்கள் மீதான ஒரு கவனத்தை ஈர்த்ததோ, டைனோசர்களை மீதான ஒரு ஆர்வத்தைத் தூண்டி டைனோசர்கள் பற்றி தேட வைத்ததோ அது போல, இத்திரைப்படம் சுறா மீன்கள் மீது பரவலான பயத்தையும் ஈர்ப்பையும் உருவாக்கியது. சுறா என்றதும் ஒரு மீன் என்பதைத் தாண்டி கடல் என்னும் பரப்பு, அதன் உலகம், அதன் பாதுகாப்பு முயற்சிகளில் பொதுமக்களின் ஆர்வத்தை அதிகரிக்க வழிவகுத்தது; இயற்கையின் மிகவும் சக்திவாய்ந்த வேட்டையாடும் உயிர்னங்களை மதிப்பதன் முக்கியத்துவத்தை உணர்த்தியது.

நம் ஊரில்தான் எழுத்தாளர்கள் புலம்புகிறார்கள் என்று பார்த்தால் மேலை நாடுகளிலும் எழுத்தாளர்களுக்கு பிரச்சனை இருக்கத்தான் செய்கிறது. இப்படத்தின் மூலமான 'ஜாஸ்' நாவலை எழுதிய எழுத்தாளர் பீட்டர் பெஞ்ச்லி ஒரு நேரலையில் பின்வருமாறு சொல்கிறார். "நான் இக்கதையை எழுதும் போது அது பெரிய அளவில் வெற்றிபெறாது என நினைத்திருந்தேன். ஒரு நாவலாக இது வெற்றி பெறாது. ஏனென்றால் இது என் முதல் நாவல். ஒரு எழுத்தாளரின் முதல் நாவலை யாரும் பெரிதாக வாசிப்பதில்லை. இது மீனைப்பற்றிய நாவலும் கூட. அதனால் யார் கண்டுகொள்ளப்போகிறார்கள் என்றிருந்தேன். மேலும் இந்த நாவலை வைத்து அவர்களால் படம் எடுக்கவும் முடியாது. ஏனென்றால் நான் எழுதிய வெள்ளை நிற சுறாமீனை திரையில் கொண்டுவரும் தொழில்நுட்பம் அச்சமயத்தில் எங்குமில்லை." அந்தளவு தன் சிந்தனையில் இருந்த ஒன்றை நிஜத்தில் உருவாக்குவது எந்தளவு சாத்தியமற்றது என்பதை நன்கு அறிந்திருந்தார். அதையும் தாண்டி உருவாக்கியது ஸ்பீல்பெர்கின் தனித்திறமை.

'ஜாஸ்' படம் வெளியாகி நாற்பத்தெட்டு ஆண்டுகள் கடந்துவிட்டது. ஆனாலும், சினிமா வரலாற்றில் ஒரு தலைசிறந்த படைப்பாகவும், திருப்புமுனையாகவும் தொடர்ந்து போற்றப்பட்டு வருகிறது. கால மாற்றங்களை எதிர்கொண்ட துடிப்பு நிறைந்த த்ரில்லர் படங்களில் முதன்மையாக இன்றும் திகழ்கிறது. ஸ்டீவன் ஸ்பீல்பெர்க் அவர்களின் திறமையான இயக்கமும், மனதிலிருந்து அத்தனை எளிதில் அகலாத சஸ்பென்ஸூம் இன்றும் ரசிகர்களைக் கவர்ந்து வரும் கிளாசிக் படங்களின் வரிசையில் இருக்கிறது. அதன் சினிமா சாதனைகளுக்கு அப்பால் 'ஜாஸ்' திரைப்படங்கள் சந்தைப்படுத்தப்படும்முறையை,வெளியிடப்படும் முறையை மற்றும் பார்வையாளர்களின் திரை அனுபவ முறையை மாற்றியமைத்தது. அதன் நீடித்த பாரம்பரியம் மற்றும் கலாச்சார முக்கியத்துவத்துடன், 'ஜாஸ்' உலகெங்கிலும் உள்ள திரைப்பட ரசிகர்களின் ஒட்டு மொத்த கற்பனையை என்றென்றும் துரத்தும் ஒரு சுறா மீனைப்போல, விறுவிறுப்பான த்ரில்லர் திரைப்படத்தின் இறுதிக்காட்சியாக இன்னமும் உள்ளது.



